சின்னச் சின்னச் சிட்டு
சிங்காரச் சிட்டு
நெல்லைப் போலே மூக்கு
நேர்த்தியான நாக்கு
வட்டச் சின்னக் கண்கள்
பட்டுப் போலே மேனி
வானத்திலே பறக்கும்
வந்து கீழே இருக்கும்.
காட்டில் இரை தேடிக்
காற்றில் சிறகை விரிக்கும்
வீட்டுக் கூரை மேலே
கூட்டில் வந்து படுக்கும்
சிட்டைப் போலப் பறந்து
நாமும் வாழப் பழகலாம்
சற்றும் சோம்பல் இன்றியே
தாவித் திரிந்து மகிழலாம்

குயில்

தனிச்சுற்றுக்கு மட்டும்





நீ நம்பும் உண்மை உன்னை வழிநடத்தும்



தும்பி ▪ சிறுவர் மாத இதழ் ▪ அக்டோபர் 2017 ▪ இதழ் வடிவமைப்பு : கல்ஆல்
கதைத் தேர்வு : அக்டோபர் 9 ▪ நிர்வாக ஆசிரியர் : அழகேஸ்வரி ▪ ஆசிரியர் : சிவராஜ்
ஒளிப்படங்கள் : பால் கிரிகோரி ▪ தொடர்புக்கு : எண் 60/86 அய்யங்குளம் தெரு
திருவண்ணாமலை - 606 601 ▪ பேச : 9843870059
*thumbigal@gmail.com* ▪ *fb:thumbi4children*



பிரார்த்தனை
அனிதாக்களுக்கு ...

நன்றியும் ப்ரியமும்
நாடக கலைஞர் ராம்ராஜ்
கவி தமிழ், கலைவாணி
ஜானகிராமன், வைதேகி
அருணிமா, வினோத்குமார்
சுனில் கிருஷ்ணா, அலை செரீனா
வண்ணம் தினேஷ், கிஷோர்
இயக்குநர் மிஷ்கின்
கரு பழனியப்பன்
மைனாக்களுக்கு
கனியூட்டும் கயித்தமலை
ஆலமரங்கள்



வணக்கம் செல்லங்களா,

ஊர்முழுக்க நல்லா மழை பெய்யுது. ஏரி, குளம், கிணறு எல்லாம் நிரம்பியிருக்கு. அதுக்காக வானத்துக்கு கைகூப்பி நன்றி சொல்லிடுவோம்.

‘அனிதா’ன்னு ஒரு அக்கா, டாக்டருக்கு படிச்சு ஏழை மக்களுக்கு சேவை செய்ய நினைச்சாங்க. ஆனால், அதுக்கு முன்னாடியே அவங்க இயற்கையோட இயற்கையா கரைஞ்சு போய்ட்டாங்க. அந்த ‘அனிதா’வப் பற்றி நம்ம அப்பா, அம்மா, பக்கத்துவீட்டு அக்கா, அண்ணன் இவங்ககிட்ட கேளுங்க. நிச்சயமா நாம தெரிஞ்சுக்க வேண்டிய மனுசி.

தீபாவளி வருது. பட்டாசுச் சத்தம் கேட்டாலே பறவைகள், சின்னச்சின்ன மிருகங்கள் எல்லாமே பயந்து மிரண்டுபோயிடும். அதனால இந்தப் பண்டிகைய வெடி வெடிக்காம மகிழ்ச்சியா கொண்டாட முயற்சி செய்வோம்.

இப்ப கதைக்கு உள்ளே போகலாமா ...

கனவு பலிக்குமா? ஆமாம் பலிக்கும்ன்னு சொல்லுது, இந்த தடவை நாம வாசிக்கப்போற ஓவியக்கதை. பூமிமுழுக்க விரிஞ்சு பரவுகிற சூரிய வெளிச்சம் மாதிரி, மனசுக்கு நம்பிக்கை கொடுக்கிற கதை இது.

வாங்க ... வாங்க ... தும்பிகளா
வண்ணங்களாக மாறலாம்
வெளிச்சத்தில் கால்மிதிச்சு
அந்தி வானத்துல ஏறலாம்

முத்தங்களுடன்
தும்பி

# அதிசயத் தூரிகை

டாமி டீபோலா



தமிழில்:
சிறகினி அதீதன்

பழங்காலத்திலே மனிதர்கள் அனைவரும் சமவெளிகளில் பயணித்தும், கூம்பு வடிவக் கூடாரங்களில் வாழ்ந்தும் வந்தனர். அவர்கள் பழங்குடிகள் என்று அழைக்கப்பட்டார்கள். அம்மக்களிடையே ஒரே ஒரு சிறுவன் மட்டும் அங்கிருந்த மற்ற சிறுவர்களைவிட உருவத்தில் சிறியவனாக இருந்தான்.

அவனால் மற்ற சிறுவர்களைப்போல குதிரைசவாரி செய்யவோ, வேகமாக ஓடவோ, வில்லில் அம்பு வைத்து எய்தவோ, மல்யுத்தம் செய்யவோ முடியவில்லை. அதை நினைத்து அவனது அம்மாவும் அப்பாவும் மிகவும் கவலைப்பட்டனர்.





அவன் உருவத்திலே சிறியவனாக இருந்ததால் அவனை அனைவரும் லிட்டில் கோப்பர் என்று அழைத்தனர். சிறுவயதிலேயே,வேட்டையில் எஞ்சும் விலங்குகளின் தோல் மற்றும் மரத்துண்டுகளை உபயோகப்படுத்தி போர்வீரர்களின் பொம்மைகளை உருவாக்கும் திறமை பெற்றிருந்தான். அப்படி உருவாக்கிய பொம்மைகளை, மலைகளில் தான் கண்டெடுத்த வழுவழுப்பான கற்களாலும், பெர்ரி பழங்களின் சிவப்புச் சாயத்தாலும் அலங்கரித்து மகிழ்ச்சியடைவான்.

லிட்டில் கோப்பரின் திறமையை கண்டுபிடித்த அப்பழங்குடி மக்களின் ஞானகுரு, "கோப்பர், நீ எதற்கும் கலங்காதே, உன்னை வருத்திக்கொள்ளாதே. உனது பாதை மற்றவர்களின் பாதையைப்போல் இல்லை. மற்றவர்கள் வீரர்களாக வளருவார்கள். ஆனால், நீ வேறு ஒரு காரணத்துக்காக எப்போதும் மக்களின் ஞாபகத்தில் இருப்பாய்" என்று ஆசி வழங்கினார்.





அப்பழங்குடி மக்களிடையே ஒரு பழக்கம் இருந்தது. சிறுவர்கள் வளர்ந்த பிறகு ஒரு மலைக்குன்றின் மீது ஏறி தாங்கள் என்னவாக வேண்டும் என்பதை யோசித்து முடிவு செய்வார்கள். அதன்படியே இளைஞனான கோப்பரும், ஒருநாள் மலையில் ஏறி அற்புதமான ஒரு கனவு கண்டான்!

அந்தக் கனவிலே ஒரு இளம் செவ்விந்தியப் பெண்ணும், ஒரு தாத்தாவும் மேகங்கள் சூழ்ந்திருந்த வானத்திலிருந்து இறங்கி வந்தனர். அந்தப் பெண் தன் கைகளில் விலங்குகளின் தோலைச் சுற்றி வைத்திருந்தாள். அந்த தாத்தா விலங்குகளின் மென்மையான ரோமங்களால் அதாவது முடிகளால் செய்த தூரிகையையும், வண்ணங்கள் நிறைந்த குட்டிக்குட்டி குடுவைகளையும் வைத்திருந்தார்.



தாத்தா லிட்டில் கோப்பரிடம், ''மகனே, இந்தத் தூரிகையும் நிறங்களும் தான் உன்னை, உனது மக்களிடையே புகழ்பெறச் செய்யப் போகின்றது! இதைக்கொண்டு நீ வீரர்களின் சிறப்புகளையும், குருமார்களின் தரிசனங்களையும் வரைவாய். அதைப் பார்க்கும் மனிதர்களின் நினைவிலும் மனதிலும் நீ எல்லா காலத்திலும் வாழ்ந்துகொண்டே இருப்பாய்'' என்றார்.

அப்பொழுது, இளம் பெண் தன்னிடமிருந்த பால் போன்ற வெள்ளைநிறத் துணியைச் சுருட்டி தரையில் வைத்தாள். ''சீக்கிரமே, இதே மாதிரியான ஒரு துணியை நீ கண்டுபிடிப்பாய். அதில், மாலைநேர வானத்தின் வண்ணங்களால் ஓவியம் வரைவாய்''

''இதெல்லாம் நிச்சயம் நடக்கும் !'' என்றாள் அந்தக் கனவில்.





அவள் பேசி முடித்தவுடன், மேகங்கள் அனைத்தும் மறைந்து அழகான சூரிய அஸ்தமனம் வானத்தை நிறைத்தது. அப்பொழுது அந்த வெள்ளைத்துணி சூரியனைப் போன்று பிரகாசமாகவும் அழகாகவும் இருந்தது. பின்பு சூரியன் மெல்லமெல்ல மலைகளின் பின்னே சென்று மறைய ஆரம்பித்தது.

வானம் இருண்டது.

திடீரென, கோப்பரின் கனவு கலைந்து
விழித்துக்கொண்டான்.
லிட்டில் கோப்பர் மலையிலிருந்து
இறங்கி அவனது கூட்டத்திற்கு திரும்பினான்.

அடுத்தநாள் காலையிலேயே, பல்வேறு விலங்குகளின் ரோமங்களை தேடித்தேடி சேகரிக்கத் தொடங்கினான். மெல்லிய முடிகளினால் மிக மென்மையான தூரிகைகளையும், குதிரையின் அடர்த்தியான வால்முடிகளை வைத்து கடினமான தூரிகைகளையும் செய்தான். பலவிதமான பெர்ரி பழங்களையும், பூக்களையும், பாறைக் கற்களையும் ஒன்றாக நசுக்கி விதவிதமான வண்ணங்களை தயாரித்தான்.

வீரர்கள் வேட்டையாடி கொண்டுவந்த விலங்குகளின் தோல்களை கஷ்டப்பட்டு சேர்த்துவைத்தான். அவற்றை மரச்சட்டத்தினுள் இறுக்கமாக இழுத்துக் கட்டினான்.

அது வெள்ளைத் திரைபோல் ஆனது. தாத்தாவும் இளம்பெண்ணும் சொன்னது போலவே அவனிடம் தூரிகை, வண்ணங்கள், வரைவதற்கானத் துணி என எல்லாம் வந்துவிட்டன.



கோப்பர், அதில் படங்களை வரைய ஆரம்பித்தான் ...

சிறந்த வேட்டைகளையும் ...



தான் கண்ட சிறந்த கனவுகளையும் ...





கற்பனைகளையும் ... படங்களாக வரைந்தான்.

இதன் மூலம், மக்கள் எப்பொழுதும் அவனை நினைவில் வைத்துக்கொள்ளமுடியும் என்று நம்பினான்.



என்னதான், ஓவியங்களாக வரைந்து கொண்டிருந்தாலும் கூட, சில நேரங்களில் லிட்டில் கோப்பர் தனது தூரிகையை ஒதுக்கி வைத்துவிட்டு நண்பர்களுடன் வேட்டையாட காட்டுக்குச் செல்வான்.

வேட்டையாடும் நேரங்களிலும் அவன் கண்ட அந்தக் கனவே திரும்பத்திரும்ப ஞாபகத்திற்கு வந்ததால் அவன் அவர்களுடன் செல்வதை நிறுத்திக்கொண்டான்.

சில நாட்களுக்கு முன்புதான், வெள்ளை நிறத்துணி போலவே இருக்கும் ஒரு விலங்குத் தோலை கண்டுபிடித்து இருந்தான். ஆனால், அதில் வரைவதற்கான சூரிய அஸ்தமனத்தின் நிறங்களை அவனால் கண்டுபிடிக்கவே முடியவில்லை. எனவே அந்தத்திரை வெறுமையாகவே இருந்தது.

பிரகாசமான பூக்களாலும், சிவப்புநிற பெர்ரி பழங்களாலும், ஊதாநிறப் பாறைகளின் வண்ணங்களை பயன்படுத்தியும் அவன் வரைந்த விதவிதமான ஓவியங்கள் அவனை திருப்திப்படுத்தவில்லை. அந்தப் படங்கள் மிகவும் மங்கலாகவும் இருளாகவும் இருப்பதாக எண்ணினான்.









ஒவ்வொரு நாள் மாலையிலும், மலையின் உச்சிக்குச் செல்வான். வானத்தை நிரப்பியிருக்கும் வண்ணங்களை ரசித்து கவனிப்பான். அந்நிறங்களை எப்படி உருவாக்குவது என்று முயற்சி செய்யத் தொடங்கினான். தான் கண்ட அழகான கனவுகளை மக்களுக்கு ஓவியமாக காண்பிக்க ஏங்கிக் கொண்டிருந்தான்.

ஆனாலும், அவன் ஒருபோதும் சோர்ந்துவிடவில்லை.
காலையில் எழுந்ததும் தனது  தூரிகை மற்றும்
வண்ணங்களினால் தன்னைச் சுற்றியுள்ள மக்களின்
கதைகளை வரைய ஆரம்பித்தான்.
தினமும் இது தொடர்ந்தது.







ஒருநாள் இரவு தூங்காமல் படுக்கையில் படுத்திருந்த பொழுது, வானத்திலிருந்து ஒரு குரல் அவனைக் கூப்பிடுவதைக் கேட்டான். அக்குரல் ‘‘உனது மக்களுக்கு நீ விசுவாசம் உள்ளவனாகவும், உனது திறமைக்கு நேர்மையாகவும் இருந்ததால் நீ தேடும் வண்ணங்களை சீக்கிரமே கண்டடைவாய்.

தினமும் மாலையில் நீ சூரியனை காணச் செல்லும் இடத்திற்கு, உன்னிடமுள்ள அந்தத் துணியை எடுத்துச் செல். அங்கே, அந்த மலையின் தரையிலே நீ தேடுவது உனக்குக் கிடைக்கும்” என்றது.

கோப்பருக்கு இது அதிசயமாக இருந்தது.



அடுத்தநாள் மாலையில் சூரியன் மறையத் தொடங்கியது.லிட்டில் கோப்பர் தன்னிடமிருந்த தூரிகைகளை கீழே போட்டுவிட்டு, அக்குரல் சொன்னபடியே மலை உச்சிக்குச் சென்றான்.

வானம் சூரியனின் அஸ்தமன வண்ணங்களால் சூழ்ந்திருந்தது.

ஆஹா, என்ன ஆச்சர்யம்!...

அவனைச் சுற்றி தரை முழுவதும் சூரிய அஸ்தமனத்தின் நிறங்களால் நிறைந்த தூரிகைகள் இருந்தன. லிட்டில் கோப்பர் ஒவ்வொன்றாக அவைகளை உபயோகித்து வேகமாகவும் கவனமாகவும், தான் கொண்டுவந்திருந்த வெள்ளைத் திரையில் வரையத் தொடங்கினான்.



வானத்தில் வண்ணங்கள் மங்க ஆரம்பித்த பொழுது, தான் வரைந்திருந்த அந்த வெள்ளைத்துணியைக் கண்டு மிகவும் மகிழ்ச்சியடைந்தான்.

கடைசியில், அவன் தேடி அலைந்த சூரிய அஸ்தமன வண்ணங்கள் அவனுக்குக் கிடைத்துவிட்டது! அந்த தூரிகைகளை மலையிலேயே போட்டுவிட்டு, அந்த ஓவியத்தையும் அதன் அழகிய வண்ணங்களையும் தனது மக்களிடம் காண்பிக்க சரிவுகளில் கீழே இறங்கினான்.

மக்கள் அனைவரும் மறுநாள் காலையில் பார்த்தபோது, அந்த மலைக்குன்று முழுவதுமே வண்ணங்களால் நிறைந்திருந்தது. கோப்பர் விட்டுவந்த அந்த தூரிகைகள் அனைத்தும் பூமியில் வேரூன்றி அற்புதமான சிவப்பு, ஆரஞ்சு மற்றும் மஞ்சள் நிற மரங்களாக நின்றிருந்தது.

எல்லாமே சூரிய அஸ்தமனத்தின் நிறத்தில் இருக்கும் மரங்கள் !

அன்றிலிருந்து ஒவ்வொரு வசந்த காலத்திலும், மலைகளும் புல்வெளிகளும் விதவிதமான வண்ணப் பூக்களால் பூத்துக்குலுங்க ஆரம்பித்தது.



வசந்த காலங்களில் மக்கள் எல்லாரும் ஒன்றுகூடி, தங்களுக்காக இந்த அற்புத ஓவியங்களை வரைந்த லிட்டில் கோப்பரை பற்றி பாட்டுப்பாடியும் ஆட்டம் ஆடியும் கொண்டாடி மகிழ்ந்தார்கள்.

அதன் பிறகு அவனை லிட்டில் கோப்பர் என்று ஒருவரும் அழைக்கவில்லை.
‘‘சூரிய அஸ்தமனத்தை பூமிக்கு கொண்டுவந்தவன்!’’
என்றே அழைத்தனர்.

காலங்கள் உருண்டோடிவிட்டது

அந்த அதிசயத் தூரிகைகளால், அம்மக்களின் ஞாபகத்தில் இப்பொழுது வரை கோப்பர் வாழ்ந்து கொண்டிருக்கிறான்.





# The Legend of the Indian Paintbrush

retold and
illustrated by
Tomie depaola

Many years ago when the People travelled the Plains and lived in a circle of teepees, there was a boy who was smaller than the rest of the children in the tribe. No matter how hard he tried, he couldn't keep up with the other boys who were always riding, running, shooting their bows, and wrestling to prove their strength. Sometimes his mother and father worried for him.

But the boy, who was called Little Gopher, was not without a gift of his own. From an early age, he made toy warriors from scraps of leather and pieces of wood and he loved to decorate smooth stones with the red juices from berries he found in the hills.

The wise shaman of the tribe understood that Little Gopher had a gift that was special. "Do not struggle, Little Gopher. Your path will not be the same as the others. They will grow up to be warriors. Your place among the People will be remembered for a different reason."



And in a few years when Little Gopher was older, he went out to the hills alone to think about becoming a man, for this was the custom of the tribe. And it was there that a Dream-Vision came to him.

The sky filled with clouds and out of them came a young Indian maiden and an old grandfather. She carried a rolled-up animal skin and he carried a brush made of fine animal hairs and pots of paints.

The grandfather spoke. "My son, these are the tools by which you shall become great among your People. You will paint pictures of the deeds of the warriors and the visions of the shaman, and the People shall see them and remember them forever."

The maiden unrolled a pure white buckskin and placed it on the ground. "Find a buckskin as white as this," she told him. "Keep it and one day you will paint a picture that is as pure as the colors in the evening sky."

And as she finished speaking, the clouds cleared and a sunset of great beauty filled the sky. Little Gopher looked at the white buckskin and on it he saw colors as bright and beautiful as those made by the setting sun.

Then the sun slowly sank behind the hills, the sky grew dark, and the Dream-Vision was over. Little Gopher returned to the circle of the People.

The next day he began to make soft brushes from the hairs of different animals and stiff brushes from the hair of the horses' tails. He gathered berries and flowers and rocks of different colors and crushed them to make his paints.

He collected the skins of animals, which the warriors brought home from their hunts. He stretched the skins on wooden frames and pulled them until they were tight.



And he began to paint pictures…

Of great hunts…

Of great Dream-Visions…

So that the People would always remember.

But even as he painted, Little Gopher sometimes longed to put aside his brushes and ride out with the warriors. But always he remembered his Dream-Vision and he did not go with them.

Many months ago, he had found his pure white buckskin, but it remained empty because he could not find the colors of the sunset. He used the brightest flowers, the reddest berries, and the deepest purples from the rocks, and still his paintings never satisfied him. They looked dull and dark.

He began to go to the top of a hill each evening and look at the colors that filled the sky to try and understand how to make them. He longed to share the beauty of his Dream-Vision with the People.

But he never gave up trying, and every morning when he awoke he took out his brushes and his pots of paints and created the stories of the People with the tools he had.

One night as he lay awake, he heard a voice calling to him. "Because you have been faithful to the People and true to your gift, you shall find the colors you are seeking.

Tomorrow take the white buckskin and go the place where you watch the sun in the evening. There on the ground you will find what you need."

The next evening as the sun began to go down, Little Gopher put aside his brushes and went to the top of the hill as the colors of the sunset spread across the sky.

And there, on the ground all around him, were brushes filled with paint, each one a color of the sunset. Little Gopher began to paint quickly and surely, using one brush, then another.



And as the colors in the sky began to fade, Little Gopher gazed at the white buckskin and he was happy. He had found the colors of the sunset. He carried his painting down to the circle of the People, leaving the brushes on the hillside.

And the next day, when the People awoke, the hill was ablaze with color, for the brushes had taken root in the earth and multiplied into plants of brilliant reds, oranges and yellows.

And every spring from that time, the hills and meadows burst into bloom.

And every spring, the People danced and sang the praises of Little Gopher who had painted for the People.

And the People no longer called him Little Gopher, but He-Who-Brought-the-Sunset-to-the-Earth.

